உ
தேவிசகாயம்



# பிரம்மஞான வினா விடை

**வினா**: - மனிதர்கள் அடையத்தகுந்த புருஷார்த்தங்களில் செம்மையாயடைய வேண்டிய மேலான புருஷார்த்தம் யாது?

**விடை**: - மோக்ஷம்.

**வினா**: - மோக்ஷம் எப்படிப்பட்டது?

**விடை**: - துக்கபாவ (துக்கமின்பத்தை) வடிவாகப் பெற்றுள்ள பரமானந்தமேயாம். (இதைத்தான் அடைய வேண்டும்.)

**வினா**: - அந்த மோக்ஷம் எதினாலுண்டாகின்றது?

**விடை**: - ஆத்தும ஞானத்தினால்.

**வினா**: - ஆத்துமா என்பது யார்?

**விடை**: - ஞானம் உள்ளவன் எவனோ அவனே ஆத்துமா ஆவன்.

**வினா**: - அந்த ஆத்துமா எத்தனை விதம்?

**விடை**: - ஜீவாத்மா, பரமாத்மா, என் றிரண்டுவிதம்

**வினா**: - ஜீவாத்துமா யார்?

**விடை**: - தேக விலட்சணனாயும் (தேகத்திற் கப்புறப் பட்டவனாயும்) தான்கர்மத்தை செய்கிறவனென்றும். தான் போகத்தை யனுபவிக்கின்றவ னென்றும், தான் சுகதுக்க முள்ளவனென்றும், நான் என்றுமுள்ள ஞானத்திற்கு விஷயமாயுள்ளவன் யாவனோ? அவனே ஜீவாத்துமா ஆவன்.

**வினா**: - ஜீவாத்துமா எத்தனை விதம்?

**விடை**: - ஒவ்வொரு சரீரமும் வேறுபட்டிருப்பதினால் ஜீவாத்துமா எண்ணிறந்த னவாகும் அந்த ஜீவாத்துமாவிற்குச் சரீரம் கர்ம்மத்தினா லுண்டாகின்றது அந்தக் கர்மம் புண்ணிய கர்ம மென்றும், பாவ கர்ம்ம மென்றும், மிசிரகர்ம்மமென்றும். மூன்று வகைப்படும். புண்ணிய கர்ம்மத்தினால் சுகத்திற்குச் சாதனமாயுள்ள தேவசரீரமும் முதலிய சரீரமும், பாவகர்ம்மத்தினால் துக்கத்திற்குச் சாதனமாயுள்ள பசு, பக்ஷி, மரம். முதலாகிய சரீரமும், மிசிரகர்மத்தினால் சுக துக்கமிரண்டிற்குஞ் சாதனமாயுள்ள மனித சரீரமும் உண்டாகின்றன.

**வினா**: - பரமாத்துமா யார்?

**விடை**: - நித்திய சுத்த முக்த சுவாபமாயுள்ளவனாயும் எல்லாவற்றையும் அறிந்தவனாயும், எல்லாவித சக்திகளையும் உள்ளவனாயும், பரமகாருண்ணிய நாயும், சகலவுலகங்களையும் உண்டாக்குகிறவனாயும், சொல்லிமுடியாத மகிமை யுடையவனாயும் உள்ளவன் யாவனோ? அவனே பரமாத்துமா ஆவன்.

**வினா**: - அப்படிப்பட்ட பரமாத்துமா (கடவுள்) எங்கே இருக்கிறார்.

**விடை**: - ஆகாயத்தைப்போல் சர்வ வியாபகனா யிருப்பதினால், எல்லா வுலகத்திலு மிருக்கிறான்.

**வினா**: - அப்படியானால் அப்பரமாத்துமா ஏன் காணப்படுகிறதில்லை.

**விடை**: - பஞ்சபூதங்களாலும் இன்ன மவைபோன்ற சில ஜடவஸ்துக்களாலும் செய்யப்பட்ட சரீரமில்லாததினால் காணப்படுகிறதில்லை.

**வினா**: - ஈஸ்வரன் இருக்கிர விஷயத்தில் பிரமாணம் என்ன?

**விடை**: - சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களும், அனுமானமும் பிரமாணமாகும்.

**வினா**: - சுருதி யென்றால் என்ன?

**விடை**: - வேதம்.

**வினா**: - ஸ்மிருதி யென்றால் என்ன?

**விடை**: - வேதத்திற்கு விரோதமில்லாமல் இருக்கிற வருணாசிரம் தருமங்களைச் சொல்வதாயும், மனு பராசர யாஞ்யவல்க்கியர் முதலிய மகான்களால் செய்யப்பட்ட தாயும் உள்ள வசன சமூகமே ஸ்மிருதி யென்று சொல்லப்படும்.

**வினா**: - இதிகாசம் என்றா லென்ன?

**விடை**: - ஏதாவ தொரு மகாராஜாவினுடைய சரித்திரத்தை அதிகரித்து பகவத் சொரூபமுதலானவற்றைச் சொல்லுவதை இதிகாசமென்று சொல்லப்படும்.

**வினா**: - புராணமென்றா லென்ன?

**விடை**: - சிருஷ்டி, சம்மாரம், மனுவந்தரம் முதலான விஷயத்தைச் சொல்லும் நூலைப் புராணமென்று சொல்லப் படும்.

**வினா**: - ஈஸ்வா னொருவன் உண்டென்று சாதிக்கின்ற அனுமானம் எப்படிப்பட்டது?

**விடை**: - இவ்வுலகம் கர்த்தாவையுடையது (பிரதிஞ்ஞை) காரியமாயிருத்தலால் (ஏது) குடம் போல் (திருஷ்டாந்தம்) (காரியமாகிய குடம் தானே. உண்டாகாமல் குயவனா லுண்டாக்கப்படுவதுபோல் காரியமாகிய இவ்வுலகமும் (காரியம் முன்னில்லா திருந்து பின்னுண்டாகுவது) ஒரு கர்த்தாவினாலுண்டாக்கப்பட வேண்டும்.) இங்கு கூறிய அனுமானத்தினால் எல்லாவுலகத்தையு முண்டாக்குகின்ற ஈஸ்வரனொருவன் உண்டென்று சித்தித்தது.

**வினா**: - பரமாத்துமா ஒருவன்றானா?

**விடை**: - ஒருவன்றான், அவனுக்குச் சரியானவன் உயர்ந்தவன் ஒருவனுமில்லை. ஒருவன்றானென்று கீழ்வரும் பிரமாணங்கள் கூறுகின்றன.

(பிரம்மம் ஒன்றே இரண்டில்லை) அத்தியாத்மோபநிஷத்.

(ஒருவன் அப்படியே சர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருக்கிறான்.) கடோபநிஷத்.

அந்தப் பரமாத்துமா ஒருவனாயிருந்த போதிலும், சத்துவ ரஜஸ் தமோ குணங்களால், சிருஷ்டி - திதி - சம்மாரங்களைச் செய்து பிர்மா, விஷ்ணு மகேசுவரன் என்கிற நாமங்களை யடைகிறான், அப்படியே சொல்லப்பட்டு மிருக்கிறது.

(ஒரே வஸ்துவா யிருக்கிற பகவானாகிய ஜநார்த்தனனே சிருஷ்டி, திதி - சம்மாரங்களைச் செய்வதினால். பிர்மா, விஷ்ணு, சிவன் என்கிற பேர்களை யடைகிறான் எந்த ஈஸ்வரன் பிர்மா, விஷ்ணு, சிவன் என்னும் பேர்களையுடைய சரீரபேதங்களால் உலகத்தைச் சிருஷ்டிக்கிறானோ இரட்சிக்கிறானோ சம்மறிக்கின் றானோ அப்படிப்பட்டவனாயும் ஆதிதேவனாயும் உயர்ந்தவனாயுமிருக்கிற பரம புருஷனை மனதில் தியானம் செய்து (ஒருவன் மோக்ஷத்தை யடைகிறான்.) விஷ்ணு புராணம்.

(ஒரே மண்ணுண்டைபல பாண்டரூபமாய் இருப்பது போலும், ஒரே பொன் அநேக ஆபரணங்களா யிருப்பது போலும், ஒரே தன்மையுள்ள பால் அநேக

பசுக்களிலிருந் துண்டாகுவது போலும், ஒரே பாமாத்துமா அநேகதேகத்தி லிருக்கிறார்) பாத்மபுராணம்.

**வினா**: - அந்தப்பரமாத்துமா எந்தவிதத்தினாலும் கண்ணுக்குப் புலப்படானோ?

**விடை**: - இல்லை, புலப்படுவன. இராமகிருஷ்ண முதலிய அவதாரங்களால் பிரத்தி யட்சமாகிறானென்பது எல்லாவுலகத்தாராலும் அறியப்பட்டிருக்கிறது.

**வினா**: - பரமாத்துமா அல்லது பகவான் என்னத்திற்காக இராமகிருஷ்ண முதலிய அவதாரங்களை யெடுத்தார்?

**விடை**: - துஷ்டர்களை நிக்கிரகஞ் செய்து சிஷ்டர்களைப் பரிபாலித்து அதின் வழியாய்த் தருமத்தை நிலை நிறுத்துவதற்காகத்தான். பகவான் அவதாரங்களை யெடுத்தார். பகவத்கீதையில் சொல்லியபடி இது பூர்வத்திலேயே பகவானால் பிரதிஞ் ஞை செய்யப்பட்டிருக்கிறது. அதாவது. (நல்லவர்களைக் காப்பாற்றுகிறதற்காகவும் கெட்டவர்களை அழித்தற்காகவும், தருமத்தை நிலை நிறுத்துவதற்காகவும் ஒவ்வொரு காலத்திலும் நான் அவதாரஞ் செய்கிறேன். எந்தக்காலத்தில் தருமத்திற்குக் குறைவுவருகின்றதோ அதர்ம்மம் வெளிப்படுகின்றதோ அப்போது நான் அவதாரஞ் செய்கிறேன் ஓ - அர்ச்சுனா?

**வினா**: - தருமம் என்றா லென்ன?

**விடை**: - மனிதனுடைய சிரேயசுக்குச் சாதனமென்று, வேதமுதலியவற்றில் சொல்லப்பட்டுள்ள, கருமம்யாதோ அதுவேயாம்.

**வினா**: - அந்தத் தருமம் என்னென்ன?

**விடை**: - தாய் தகப்பன்மாருடைய சேவை, குருபக்தி பகவதாராதனம், அதிதிபூசை, ஸத்கதாசிரவணம். சத்சங்கஞ் சேருதல், நன்றியறிதல், பிறரை யிம்சிக்காம லிருத்தல், பரோபகாரம், எல்லாப் பிராணிகளிடத்திலும் பட்சமாயிருத்தல், சத்தியம், பொருமையாயிருத்தல், முதலியவைகளாக விருக்கும்.

இப்படியே வேதத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

(சத்தியத்தைப்பேசு, தர்ம்மத்தைச் செய், தாயாரையும் தகப்பனையும், குருவையும், அதிதிகளையும் தெய்வமாக நம்பு. எந்தக் கருமங்கள் குற்றமில்லாத னவாக விருக்கின்றனவோ அவைகளைச்செய். மற்றக்கருமங்களைச் செய்ய வேண்டாம்.) தைத்திரியோபநிஷத்.மனுஸ்மிருதியாலு மிப்படியே சொல்லப்பட்டிருக் கிறது. (தைரியம், பொறுமை, வெளியிந் திரியங்களை யடக்கல், திருடாமலிருத்தல், சரீரசுத்தம் அந்தக்கரணசுத்தம், உள்ளிந்திரியங்களை நிக்கிரகித்தல், புத்தி, வித்தை, சத்தியம், கோபமில்லாமலிருத்தல் இந்தப்பத்தும் தருமத்தின் இலட்சணங்களாகும். (சத்தியமும், தர்ம்மமும் பராக்கிரமும், உயிர் பிராணியிடத்தில் பட்சமா யிருத்தலும்

ஜனங்களிடத்திற் பிரியமாய்ப் பேசுவதும், பிராமணன், தேவதை அதிதி யென்னு மிவர்களைப் பூசிப்பதும் ஆகிய விவைகளைச் சுவர்க்கத்தின் வழி யென்று வேதத்தில் சொல்லுகிறது.- ஸ்ரீமத் ராமாயணம்.

**வினா**: - தருமத்திற்கு மூலம் யாது?

**விடை**: - ஆசாரம்.

**வினா**: - ஆசாரம் என்றா லென்ன?

**விடை**: - பெரியோர்கள் தர்ம்மத்தோடு கூடிய புத்தியினாற் செய்கிற வியாபார விசேஷம்.

(நான்கு வருணங்களுக்குமுள்ள தருமத்தை ஆசாரமானது காப்பாற்றுகின்றது. ஆசாரத்தைக் கைவிட்டுப் பிரஷ்டமான சரீரத்தை யுடையவர்களின்றும் பிரிந்து தருமமானது பாராமுகமாய்ப் போய்விடுகின்றது) அனுஸ்மிருதி பின்னும் சொல்லப் பட்டிருக்கிறதாவது, ஒருவன் வேதங்களை ஆறு அங்கங்களோடு கூடப் படித்தறிந் தாலும் ஆசாரமொன்று அவனிடத்திலில்லாவிட்டால் அம்மனிதனை அந்த வேதமா னது பரிசுத்தஞ்செய்கிறதில்லை, இரக்கை முளைத்த பக்ஷிகள் எப்படிக் கூட்டை விட்டு நீங்குகின்றனவோ, அப்படியே மரணமடையுங் காலத்தில் ஆசாரமில்லாத மனிதனை வேதமானது விட்டுவிடுகின்றது. உலகத்தில் மனிதன் ஆசாரத்தினால் ஆயுளை யடைகிறான். ஆசாரமுள்ள வொருவன் தன்னால் கோரப்பட்ட பிரஜை களை யடைகிறான். ஆசாரத்தோடிருக்கு மொருவன் அட்சயமான செல்வத்தை யடைகிறான். ஆசாரமானது மனிதனுடைய கெட்ட குணங்களை நீக்கிவிடுகின்றது. துராசாரமுள்ள வொருவன் உலகத்தாரால் நிந்திக்கப்பட்டவனாகிறான், அதுவுமன் றித் துக்கத்தையடைகிறவனாயும் எப்பொழுதும் வியாதிகள் உள்ளவனாயும், அற்பாயுள் உள்ளவனாயும் ஆகிறான்.

**வினா**: - அந்த ஆசாரம் அவசியம் செய்ய வேண்டியது தானோ?

**விடை**: - ஆம். அவசியஞ் செய்ய வேண்டியதென்று மகாபாரதத்திலும் ஆரிதஸ் மிருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆசாரத்தை மிகுபிரயத்தினத்தோடு காப்பாற்ற வேண்டும். பணமானது வருதலும் போதலுமாயிருக்கும். ஒருவனுக்குப் பணம் போய்விட்டால் அவனை அழிந்தவனென்று சொல்லக்கூடாது. எவனொருவன் கெட்ட நடத்தையால் அழிந்து போகிறானோ அவனே நிஜமாயழிந்து போனவன் - ஸ்ரீமகாபாரதம்.

ஆகாயத்திற் பறந்து செல்வதற்குப் பக்ஷிகளுக்கு எப்படி இரண்டு இரக்கைகள் இருக்கின்றனவோ, அப்படியே. ஒருவன் சாசுவதமான பிரமத்தைய்டைய கர்ம்மம் ஞானமென்னு மிரண்டுஞ் சாதனமாயிருக்கின்றன - ஆரீதஸ்மிருதி.

## பிரம்மஞான வினா விடை

**வினா**: - பிரம்மமானது எப்படிப்பட்டது?

**விடை**: - பிரம்மமானது பூத, பவிஷியத், வர்த்தமான மென்னும் முக்காலங்களாலும் பாதிக்கப்படாதது.

பிரம்மமானது எந்தக்காலத்தாலும் பாதிக்கப்படாதது (அதாவது கடவுள் ஆதியந்த மில்லாதவர்.)

பிரம்மமானது சகுண சுரூபமாயும் நிர்குண சுரூபமாயு முள்ளது. அதாவது, பிரபஞ்ச சிருஷ்டிக்கு முந்தியும் அப் பிரபஞ்ச அழிவாகிய பிரளயத்துக்குப் பிந்தியும், உள்ளகல்பங்களில் தன்னுடைய மேலான ஆத்மசுரூபத்தி லிருக்கும் பொழுது சத்துவம், ரஜசு, தமம் என்கிற முக்குணங்களும் அதற்கில்லை, ஆனால் இராமன், கிருஷ்ணன் முதலான அவதார மெடுக்கும்பொழுது வெளிப்படையாய் அம் முக்குண ங்களுக்கு முள்ளாகிறார்? வாஸ்தவத்திலோ வென்றால் அம்முக்குணங்களுக்கும் அவரைப் பாதியாது.

பிரம்மமானது ஆதியும், மத்தியும், அந்தமுமில்லாதது அதாவது, அவர் எந்நாளு மழியாமலிருக்கப்பட்டவர்.

இதெல்லாம் பிரம்மந்தான். அதாவது அவர் அந்தர்பூதமாயில்லா தவஸ்து இப்பிரபஞ்சத்தில் கிடையாது.

பிரம்மமானது மாயையாலும் குணத்தாலும் பாதிக்கப்படாதது.

பிரம்மமானது முடிவில்லாததும், அளக்கமுடியாததும் பகுக்கமுடியாததும், பரிபூரணமானதுமாம்.

பிரம்மமானது இரண்டாவதில்லாததாயும், பரமானந்தமுள்ளதாயும், பரம பரிசுத்தமாயும், பரம பிரகாச முள்ளதாயும், எவ்வித பந்தத்திலும் அகப்படாததாயும், சத்திய சுரூபத்தோடு எங்கும் வியாபிக்கிறதாயும், நாசமில்லாததாயும் எவ்வித நிர்ப்பந் தமான சம்பந்தத்திலும் மகப்படாத தாயுமுள்ளது.

பிரம்மமானது சச்சிதானந்த சுயப்பிரகாசரூபம், அதாவது உண்மை, ஞானம், ஆனந்தம், பிரகாசம் இவற்றின் மேலான பரிபூரணமான ரூபம் அவரே.

பிரம்மமானது மனதால் எட்டமுடியாததும், வாக்கால் சொல்ல முடியாதது மானது, அதாவது நூல்களையும் உலகத்தையும் அறைகுறையா யறிந்த அற்ப அறிவினானே சுவாமியின் நிஜரூபத்தை யறிய முடியாது அதிஜாஸ்தியும் நுட்பமு மான யோசனையும் அனுபவமும் இருந்தால் தான் அவரை அறியலாம்.

பிரம்மமானது சகல பிரமாணத்தாலும் அறியக்கூடியது, அதாவது, அவருடைய நீஜசுரூபத்தைத் தெரிந்துகொள்ள வேதங்களையும் மற்றுமுள்ள பிரமாணங்களையும் நன்றாய்க் கற்றாலொழிய, மூடபக்தியினால் முடியாது.

பிரம்மமானது எண்ணிறந்த உபநிஷத்துக்களையும் சாஸ்திரங்களையும் படித்துத் தெரிந்துக்கொள்ளக் கூடியது.

அது இடம், காலம், வஸ்து என்னுமிவைகளால் பரிச்சேதம் செய்யப்படாதது (குறுக்கப்படாதது) அதாவது அவர்ஏககாலத்தில் எங்குமிருப்பார், எல்லாக்காலத்திலுமிருப்பார் அவருக்குச் சமமாயாவது மேலான தாயாவது ஒன்றுமில்லை.

பிரம்மமானது எல்லாவஸ்துவிலும் பரிபூரணமாய் விரைந்திருக்கிறது.

பிரம்மமானது நாலாவது வஸ்துவாயும் (அதாவது, முக்குணங்களுக்கு மெட்டாத வஸ்துவாயும்) நிராகாரமாயும் (அதாவது இன்னதுதானென்று குறிப்பிட்ட உருவமில்லாமல், வேண்டியபொழுது உலகத்தைப் பரிபாலிக்கிறதற்காக இச்சையானவடிவை அடைகிறதாயும்) ஒரே வஸ்துவாயுமுள்ளது.

அது அத்வைதமாயும் இன்னவித மென்று சரியாய்ச் சொல்லக் கூடாததாயும் இருக்கிறது.

அது பிரணவ சொரூபம், அதாவது ஓம் என்னும் சப்தத்தால் சொல்லப்பட்டது.

(இந்துமத நூல்களில்) அது ஓங்கார சொருபமென்றேவு சொல்லப்பட்டிருக்கிறது.

அது ஓங்காரம் முதலிய சமஸ்தமந்திர சொரூபமாயு மிருக்கிறது - ஸ்ரீ மஹாநாராயணோபநிஷத்.

**முற்றிற்று.**